சென்னை திராவிட புத்தக டிபோ பதிப்புகள்.

# சிவபோகசாரமும், சிவஞானவிளக்கமும்.

இவை

நன்றாய்ப் பரிசோதிக்கப்பட்

விலை அணா 2.

MADRAS:
PRINTED AT THE TAYLOR WORKS.

1906.

கடவுள் துணை.

# சிவபோகசாரம்.

சித்திதரு நாதன் றென்கமலை வாழ்நாதன்
பத்திதரு நாதன் பரநாதன்—முத்திப்
பெருநாதன் ஞானப் பிரகாச னுண்மைத்
தருநாத னங்குரு நாதன்.

பரம ரகசியத்தைப் பாழான வாயா
லிரவுபக லெந்நேர மின்றிக்—குரவெனியக்
கூப்பிட்டெங் காணுமோ கோமட நெஞ்சேமால்
பூப்பிட்டெங் காணுப் பொருள். (1)

இந்தனத் திலங்கி யெரியுறு நீர்தேனிரதங்
கந்தமலர்ப் பொதுவான் கயலொளிகண் – சந்ததமு
மத்துவித மாவதுபோ லான்மாவு மீசனுமாய்
முத்தியிலே நிற்கு முறை. (2)

ஆறுறு தத்துவமு மாணவமும் வல்வினையும்
நீறுக முத்திநிலை நிற்போர்க்குப் – பேறுகப்
பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியிற் சித்தியிலே
யோர் விருத்தப் பாதிபோதும். (3)

தூரத்தி யனையாசை தொடராம லென்றும்
விரத்தியினு லாங்கவற்றை விட்டெப்—பரத்திலன்பு
செய்யடா செய்யடா சேரப் பிரபஞ்சமெல்லாம்
பொய்யடா பொய்யடா பொய். (4)

பாவிமனம் போகாப் பரத்தடைய நாளு
மிரவுபக லற்ற விடத்தே—திரமாக

ஆறாறு தத்துவமு மாணவமு நீங்கியுயிர்
வேறாக நின்றவிடஞ் சொல்லில்—மாறா
விருளாய பாவனைமற் றெங்குமாய் நின்ற
பொருளோகா ணீயே புணர். (6)

அறிவு நீயென்ன வறிந்தறிந்து மாயைச்
செறிவு நானென்றென்று சேர்ந்தா—லறிவு
செறிந்திடுமோ வின்பசுகஞ் சேர்ந்திடுமோ நின்னைப்
பிறிந்திடுமோ சென்மப் பிணி. (7)

அரணங் கடாமெரித் தவத்தரே யென்னுட்
கரணங்க ளோட்டும்வகை காட்டீர்—கரணங்க
ணீயறிவாய் நில்லாம ணின்னறிவைக் கண்டருளிற்
போயதுவாய் நின்றுவிடப் போம். (8)

செறியுந் தனுவாதி சேர்ந்தறிந்து நின்ற
வறிவை யறிவா லறிந்தே—யறிவிழுந்து
நின்றாற் சுகானந்த நீடுநிலை வேறு
சென்றாற் சுகங் கிடையாதே. (9)

எங்கு மிருக்கு மறிவுநீ யேகமா
யங்கங் குணர்த்து மறிவுநாட்—பொங்கு
மலமறைத் தன்மாயை மயக்கல் விகாரப்
பலமனைத்துங் கன்மமலம் பார். (10)

ஒருமையுட னீசனரு ளோங்கியென்றுந் தூங்க
வருமை யருமை யருமை—பெருமையோ
டாங்காரங் கோப மபிமான மாசையிவை
நீங்காத போது தானே. (11)

போகம் புவனம் பொருந்துமிட மெங்கெங்குந்
தேகங் கரண மிந்திரியமே—யாகிலது
தன்னை நீயென்று தளராதே நெஞ்சமே

தானோ வசத்தல்ல வென்றறிந்தாற் றாரணியி
லேனோ பிதற்றிடுவொ னேழைதான்—றானே
யிறவா ததுணீகா ணிற்க வருளின்
மறவா திருசிவ யாளை. (13)

இன்பசுகத் துள்ளே யிருக்கலா மெப்போதுந்
துன்பவினை யுன்னைத் தொடராது—வன்பர்
மருட்டேக மாயடங்கி மாயாதே நெஞ்சே
யருட்டேகமா யடங்கு வாய். (14)

கள்ள வரனே கருணையுட னென்னறிவி
லுள்ளசுகந் தந்துவிட வொண்ணாதோ—மெள்ள
வருந்துவதுந் தீவினையில் வாட்டுவது ஞானம்
பொருந்துவது மென்றான் புகல். (15)

சுட்டறிவு கெட்டா சுகாதீத வுண்மையிலே
விட்டகலா தென்றும் விரவுவோர்—இட்டமுடன்
யோக சமாதிகளும் முட்புறம்பாம் பூசைகளு
யாக நினையா ரவர். (16)

இற்றைவரைக் கரணத்தோ டிணங்கி நின்றனையே
யிற்றைவரைச் சனன மெடுத்தனையே—யிற்றைவரைத்
துன்பவெள்ளத் துள்ளே துளைந்தனையே யிதறநல்
லின்பவெள்ளத் துள்ளே யிரு. (17)

எத்தனையான் கற்றாலு மெத்தனையான் கேட்டாலு
மெத்தனை சாதித்தாலு மின்புறாச்—சித்தமே
மெய்யாகத் தோன்றிவிடு மேலாக வாழ்வனைத்தும்
பொய்யாகத் தோன்றாத போது. (18)

கட்டமாங் காயங் கலையனைத்துங் கற்றாலு
மட்டமா சித்தி யடைந்தாலு—மிட்டம்

உரையிறந்தா லுன்னு முணர்விறந்தான் மாயைத்
திரையிறந்தாற் காண்கின்ற தெவை—வரைபெருக
வாசிப்பதும் வாயால் வாழ்த்துவது நாடகமாய்ப்
பூசிப்பதுஞ் சுத்தப் பொய். (20)

மனையில்வரு போகத்தின் மாதர்மக்கள் பாச
வினையி லழுந்தி விடாதே—யுனையிழந்து
காணமற் கண்டானைக் காட்சியறக் கலந்து
பூணமை லெப்பொழுதும் பூண். (21)

அகமாதி கண்ட வறிவாகி யெங்குஞ்
சுகமாகி யெங்குஞ் சுகமாய்ச்—சுகாதீதத்
தானந்த வெள்ள மதுவாய்ச் சுகத்தைமறந்
தானந்தமா யழுந்து வாய். (22)

நானுஞ் சுகவடிவாய் நண்ணினே னின்னருளால்
வானுஞ் சுகவடிவாய் மன்னிற்றே—வானுஞ்
சுகரூப மன்றுமணந் தோற்றநிலம் போலுன்
னகரூப மட்டே யது. (23)

உருவை யருவை யொளியை வெளியை
யிருளைச் சிவமென் றிராதே—மருளைப்
பிறிந்தறிவைக் கண்டதனைப் பின்னமற வெங்குஞ்
செறிந்தபொரு டானே சிவம். (24)

தானல்லா தத்தனையுந் தானென் றுழலாமற்
றானல்லா மாயைதனுட் டாக்காமற்—றனெல்லா
மானே மெனும்போதத் தாகாம லீசனிடத்
தானேனே யாயின வனும். (25)

மாதா பிதா சுற்றமென்று மயங்கினையே
நீதான் றனுவாகி நின்றனையே—யீதெல்லாம்
பொய்யென் றறிந்தனையே பூரணனந்த வெள்ள
மெய்யென் றறிந்தனையே மெய். (26)

ஆறாறு தத்துவநீ யன்றென் றறிந்தனையே
யாறாறுங் கண்டறிவ னாயினையே—மாறாம
லுன்னறிவி லானந்தத் தோங்கினையே யோராமல்
நின்னறிவை விட்டதுவாய் நில். (27)

சுத்தவத்தை நாடியிடுஞ் சுத்தவி ராப்பகலா
மெய்த்தவத்தை நாடி விடுவையேல்—சுத்தவத்தை
தானா யிரண்டுந் தவிர்ந்த சிவானந்த
வானாவை நீயே மதி. (28)

இட்டசன மெங்கே யிதமகிதந் தானெங்கே
துட்டசன மெங்கே தொழிலெங்கே—சிட்டருடன்
கூடித்திரிந்த தெங்கே குன்றாச் சிவானந்த
நாடியது வாயிருந்த நாள். (29)

என்று சனனத் திடர்க்கடலி லேமூழ்கிப்
பொன்றுமனமே யுனக்கோர் புத்திகேள்—நன்று
தனிச்சங்கஞ் சாராமற் றற்பரநீ சாரி
லினிச்சங்கஞ் சேரா திரு. (30)

தத்துவங்க ளெண்ணித் தலையடித்துக் கொள்ளாதே
தத்துவங்க ளேதென்னிற் சாற்றக்கேள்—மெய்த்துஞ்
சுகாரம்ப மாஞ்சிவத்திற் றோயாத மாயா
விகாரங் கடத்துவ மாமே (31)

அநாதி சுகரூபி யரனடிக்கீ ழென்று
மனாதி சுகரூபி யான்மா—வனாதி
யிருந்த ம்லம்போக்கி யிறையருளி னாலே
யிருந்த படியே கண்டிரு. (32)

உன்னாதே பற்றா துரையாதே யொன்றியதி
னின்னாமை யில்லை நிகழாதே—பன்னாட்
பரையிறந்து நிற்கும் பயனணைந்தார் நெஞ்சிற்
றிரையிறந்து நிற்குஞ் சிவம். (33)

நானங்காய் நீயிங்காய் நாட்டமுற வைத்ததற்பின்
னானெங்கே நீயெங்கே நாதனே—வானெங்கு
மொன்றாகி நின்ற வுணர்வுநீ யுன்னறிவில்
நன்றாகத் தோன்று சுகநாம். (34)

அறிவா யறிவிழப்பி லாகின்ற வின்பச்
செறிவாய்ச் சுகமாய்த் தினமும்—பிறியா
திருந்தங் கதீதமா யெய்ந்த சிவானந்தம்
பொருந்துவர்நன் முத்தரெல்லாம் போய். (35)

அறிவிழந்து நின்றசுக வானந்தத் துள்ளே
குறியிழந்து நின்று குலாவிப்—பிறியா
திருந்தாற் பிறப்பறுமோ யிச்சைமால் கொண்டு
திரிந்தாற் பிறப்பறுமோ செப்பு. (36)

அழுந்தாதே பாசத் தனுதினமு மையோ
விழுந்தா யெழுந்திருக்க வேணுஞ்—செழும்பாகை
மீறித் தருமர்த வீட்டின்ப மாமலையே
லேறித் திரும்ப லாமோ. (37)

தாகமறந்து சரீரமறந்து தான் மறந்து
தேகமறந் தட்டமா சித்திமறந்—தாகத்தின்
வந்ததறி யாதிருந்து மாறாச் சிவானந்தஞ்
சந்ததம் வாழ்வார்க் காரசரி. (38)

அநித்தியத்தை நித்தியமென் றாதரிக்கும் பொல்லா
மனித்தருடன் கூடி மருவாதே—தனித்திருந்து
மோனந்த மாஞ்சிவத்துண் மூழ்கிமலத்தை யறுத்
தானந்தமா யழுந்து வாய். (39)

கிட்டாத வீசனுனைக் கிட்டியருள் புரிந்த
கிட்டானு பூதி நிலையிலே—முட்டா
திருவன்னி சேர்ந்துமாற் றேறியபொன் போலே
வருமின்ப பூரண மாவை (40)

அளவிலாச் செல்வத் தடைந்தாலு மாயத்
தளவிலாச் சித்திக ளுண்டாயு—மளவில்கலை
யாய்ந்தாலு மென்னை சுகரல்லார் சிவானந்தந்
தோய்ந்தார்க ளன்றோ சுகர். (41)

தேசமூர் பேர்காணி சீர்வரிசை சாதியெனு
மாசையா னெஞ்சே யலையாதே—நேசப்
பொருப்பானை யுன்னறிவிற் போக்குவர வின்றி
யிருப்பானைப் பார்த்தே யிரு. (42)

என்னை யறிவென்றா னென்னறிவி லானந்தந்
தன்னைச் சிவமென்றான் சந்ததமு—மென்னையுன்னைப்
பாரா மறைத்ததுவே பாசமென்றா னிம்மூன்று
மாராய்ந்தவர் முத்த ராம். (43)

தத்துவத்தை விட்டறிவிற் றன்கலந்து தன்னிழப்பில்
மெய்த்துஞ் சுகத்தின் மிகவமுந்திச்—சுத்தமா
யொன்றாகி நின்ற வுணர்வு மொழிந்தக்கா
லன்றோ சிவபோக மாம். (44)

தேக மறந்து திருவருளாய் நின்றசிவ
போகம் விளையப் புணர்னெஞ்சே—நோக
வருந்தாமற் றீவினையில் வாடாமற் றுன்பம்
பொருந்தாம னீபிற வாமல். (45)

பொசிப்போஞ் சிவபோகம் பூரணமா யெங்கும்
வசிப்போ முலகில் வசியோ—முசிப்பின்றி
வாழ்வோஞ் சிவத்தையுணர் மாதவர்தம் பொன்னடிக்கீழ்த்
தாழ்வோ மெமக்கார் சரி. (46)

வாக்குமனக் காயத்தால் வந்தபொரு ளத்தனையும்
வாக்குமனக் காயத்தான் மாயுமே—வாக்குமனக்
காயமுட னிழந்து காணுா துருஞான
நேய மிழந்த நிலை. (47)

வாயுவெளி தானசையா வாறிருந்தாற் போலென்றும்
நீயதுவும் பூரணமாய் நிற்கவே—காயத்துக்
குள்ளுள்ளே தான்சிவமென் றுற்றுப்பார்ப் பாருசிப்
பொள்ளலால்வான் பார்த்தல் போல். (48)

பூதாதி பாசமல்லோ பூரணவா னந்தமல்லோ
பேதமற நம்முட் பிரானல்லோ—வாதனைகள்
விட்டாற் சுகமல்லோ வென்றுணர்வில் வேண்டுவதுங்
கெட்டாற் பிறப்புங் கெடும். (49)

நனவாதி யந்தத்தி னுடுசுகந் தன்னைக்
கனவாதி யந்தத்திற் கண்டு—நனவாதி
தோற்றிடும் போதந்தச் சுகரூபங் கண்டவர்கண்
மாற்றிடுவ ரென்று மலம். (50)

உள்ளமலம் நீங்கி யொழியாச் சிவானந்த
வெள்ளந் துளைந்து விளையாடும்—பிள்ளைகா
ளத்துவித மானீ ரெம்மாகம் பிரிந்தோமே
நித்துவித மெண்ணுவா னேன். (51)

நின்னறிவி னுள்ளொளித்து நீயாகி நின்றதுபோ
லென்னறிவி னீயொளித்தே யானுகிப்—பின்னமற
நிற்கவல்லை யாமாகி னின்செனனம் போக்குதற்குக்
கற்கவல்ல தேதுமில்லைக் காண். (52)

தன்னை யிழந்திடத்தே தானே சுகவடிவா
யின்னபடி யென்றுணரா வெங்கோனுட்—பின்னமற
நின்றநிலை தானுந் தெரியாதே நின்றவர்கட்
கன்றோ பிறப்பறுக்க லாம். (53)

தன்பெருமை யெண்ணுமை தற்போதமே யிழத்தல்
மின்பெருமை யாஞ்செகத்தை வேண்டாமை—தன்பா
லுடலைத் தினம்பழித்த லோங்குசிவத் தொன்ற
நடலைப் பிறப்பொழியு நாள். (54)

அதிட்டான மீச னருளன்றி மற்றை
யதிட்டான மெல்லா மகித்த—மதிட்டானம்
பொய்யென் றறியாமற் பூதலத்து நெஞ்சேநீ
மெய்யென் றுழல்வதெல்லாம் வீண். (55)

முற்றின்ப மாமருளின் மூழ்குவது மோகமிகு
சிற்றின்ப மாமருளிற் சேர்குவது-முற்றிங்
கறிந்தா னன்னெஞ்சே யகிலாண்ட மெல்லாஞ்
செறிந்தான் செயலே தெளி. (56)

ஆர்பெரிய ரார்சிறிய ரார்பகைஞ ராருறவர்
சீர்பெரிய ரானந்த சிற்சொரூபர்-பேர்பெரிய
ரெங்கெங்குந் தானா யிருந்துசெட சித்தனைத்து
மங்கங் கியற்றுவ தால். (57)

மனவாக்குக் காயமுயிர் மன்னி யசைப்பானு
மனமாதி போக மளிப்பானுங்-கனவாதி
கூட்டிவிடுவானு முத்தி கூட்டுவானும் பிறப்பி
லாட்டி விடுவானு மரன். (58)

ஆனசுக துக்கத் தழுந்துகினும் ஞானிகடாம்
யானெனதென் றெண்ணி யிசைந்திடினுந்—தானதற்கு
வேறென் றருளால் விரளமாய்க் காணீரென்று
மேறுமோ கன்ம நிலை. (59)

என்னிடத்து நின்செயலே யில்லையென்றால் யாதுறினும்
நின்னிடத்து யான்வேண்ட னிச்சயமே—யென்னிடத்தி
லின்மை யுயிர்க்குயிர் நீயின்மை யிருந்தியற்றி
னன்மைதுன்மைக் கேதுவோ நான். (60)

ஏற்றாதவையா யிருப்பதுவு முன் மயக்க
மாற்றாது நீரென் றாற்றுவதுந்—தோற்றாது
தோற்றுவது முன்னைச் சுகபூ ரணமெனவே
தேற்றுவது மீசன் செயல். (61)

மிருத்தகுலஞ் செல்வத்தின் மேவுவது மீதைப்
பருத்திதுபொய் யென்றுவிடும் பாங்கும்—தொகுத்து
விரித்தானன் னெஞ்சே யிரும்வா ரணத்தை
யுரித்தான் செயலென் றுணர். (62)

சும்மா தனுவருமோ சும்மா பிணிவருமோ
சும்மா வருமோ சுகதுக்க—நம்மான்முன்
செய்தவினைக் கீடாய்ச் சிவனருள்செய் விப்பதென்று
லெய்தவினை நாடி யிரு. (63)

பாசஞ் சடமுயிரோ தானுகப் பற்றறியா
தீசனிரண்டு மினைத் தாட்டிப்—பூசலென்றுஞ்
செய்பவனே தானே திரும்பவருள் செய்யானே
லுய்பவர்தா முண்டோ வுரை. (64)

சத்துருவு மித்துருவுந் தாரணியில் வேறில்லைச்
சத்துருவு மித்துருவுந் தன்னெஞ்சே—பெத்தமலம்
வீட்டும் படிக்கு வினைக்கீ டினைத்தனுவோ
டாட்டுஞ் சிவனென் றறி. (65)

எங்கே நடத்துமோ வெங்கே யிருத்துமோ
வெங்கே கிடத்துமோ வென்றறியேன்—கங்கைமதி
சூடினன் றில்லையிலே தொங்தோ மெனநடன
மாடினு னெங்கோ னருள். (66)

நின்னை மதிக்கி னினக்கதிபர் செல்வநினை
நின்னைவறிஞ னெனநீ நினையில்—நின்னிற்
சிறியார் வறுமை நினைநெந்தை புகவென்று
மறியா விடும்பை துக்கங்கள். (67)

வன்மை புரிகாய மரப்பாவை தன்னையான்
கன்மமெனுஞ் சூத்திரத்தாற் கட்டியே—நன்மைதுன்மை
யாட்டுவது நாடா தறிவிலார் தஞ்செயலாய்
நாட்டுதல்போ லுண்டோ நகை. (68)

கூட்டுவதுங் கூட்டிப் பிரிப்பதுவு மொன்றொன்றை
யாட்டுவது மாட்டி யடக்குவதுங்—காட்டுவதுங்
காட்டி மறைப்பதுவுங் கண்ணுதலோன் முன்னமைத்த
வேட்டின் படியென் றிரு. (69)

ஊட்டும் வினையிருந்தா லுன்றனை யுன்பதத்தைப்
பூட்டிப் பிடித்துப் பொசிப்பிக்கும்—கேட்டுத்
திரியாதே வந்துதில்லைத் தெய்வமே யென்றென்
றெரியாதே நெஞ்சே யிரு. (70)

எவ்வுயிருங் காக்கவோ ரீசனுண்டோ வில்லையோ
வவ்வுயிரில் யாதொருவ னல்லவோ—தவ்விப்
பொருகுவதும் நெஞ்சே புழுங்குவதும் வேண்டாம்
வருகுவதுந் தானே வரும். (71)

அவரவருக் குள்ளபடி யீசனரு ளாலே
யவரவரைக் கொண்டியற்று மானு—லவரவரை
நல்லார் பொல்லாரென்று நாடுவதே நெஞ்சமே
யெல்லாஞ் சிவன்செயலென் றெண். (72)

அன்றே யநாதி யமைத்தபடி யல்லாதொன்
றின்றே புதிதா யிசையுமோ—வென்றுஞ்
சலியா தியற்றுவான் றன்னையே நோக்கி
மெலியா திருந்து விடு. (73)

முன்னை வினைக்கீடாய் முதல்வ னருணமைக்கொன்
டென்ன வினைசெய்ய வியற்றுமோ—வின்னவினை
செய்வோந் தவிர்வோந் திரிவோ மிருப்போமென்
றுய்வோ மெனும்வகை யேது. (74)

அமைத்த வினைக்கீடே யனுதினமுஞ் செய்வ
திமைப்பொழுதும் விண்செயலொன் றில்லை—யுமைக்குரியா
னல்லா மறிந்தெங் கியற்றுவதுந் தன்னடிமை
வல்லார் தமக்குணர்த்து வன். (75)

இன்னவினை யின்னதலத் தின்னபொழு தின்னதனு
வின்னபடி யாய்ப்பொருந்து மென்றமைத்தே—யன்னவினை
யன்னதலத் தன்னபொழு தன்னதனு வின்னபடி
பின்னமறக் கூட்டும் பிரான். (76)

ஏதேது செய்தாலு மேதேது சொன்னாலு
மேதேது சிந்தித் திருந்தாலு—மாதேவா
நின்செயலே யென்று நினதருளாலே யுணரி
லென்செயலே காணகி லேனே. (77)

கேளா தெனைமலத்திற் கிட்டியெடுத் தேகாது
மீளா தளித்தைபர வீட்டிலே—யாள
வுனக்குப் பொறியே யுனைத்தொடர்ந்தா னென்ன
வெனக்குப் பொறியே யினி. (78)

முப்பதுஞ் சென்றால்வெடியு முப்பதுஞ் சென்றாலிருளு
மப்படியே யேதுமறி நெஞ்சே—யெப்பொழுது
மாங்கார மெவ்வினையு மாகுமது துலைந்து
போங்கால மெவ்வினையும் போம். (79)

ஆவலுறு சகலத் தாவதுமாங் கவனே
கேவலத்தின் மூழ்கிக் கிடப்பதுவு—நாவாழ்த்த
வில்லாத சுத்தத் திருப்பதுவு மிம்மூன்று
மில்லான் செயலென் றிரு. (80)

பொய்யில் வருந்துன்பம் புகுந்தறிந்தும் பூரணமா
மெய்யில் வருமின்ப விளைவறிந்து—மையோ
தெளியாத தென்னநல்ல தீங்குகண்டு சற்றுங்
களியாத தென்ன மயக்கம். (81)

தேகநா மென்றென்று செப்புவீ ரீதில்வரும்
போகநா மென்று புலம்புவீர்—சோக
வருந்துவீர் தீவினையின் மாறாத வின்பம்
பொருந்துவீ ரெப்படிநீர் போய். (82)

எத்திசையு மெவ்வுலகு மெதமதாழுலு மொடபயனு
நித்தியமென் றெண்ணி நிலையாதே—புத்தியினாற்
கண்ணாடி யிற்றோன்றி யேமறையுங் காணிவற்றிற்
கண்ணாடியிற் கனவிற் காண். (83)

ஆறாறு தத்துவும்வைத் தத்திலுறை மூர்த்திகள்வைத்
தேறாம லப்பாக மேறவே—மாறாம
லுன்னைவிடா தாள்வா னுனைக்கேட்டோ நெஞ்சமே
யென்ன விசார மெமக்கே. (84)

மின்போலத் தோன்றிவிடு முலகவாழ் வனைத்து
மென்போலிக டிரமென் றெண்ணுவார்—தன்போத
மில்லார் சிவபோக மென்று மருந்திவிடு
நல்லார் திரமிதுவென் னார். (85)

ஆறாறு தத்துவமு மாணவமு நீங்கியுயிர்
பேறாக வானந்தம் பெற்றாலும்—வேறாகப்
பார்த்திருப்ப தன்றியே பாழான கன்மத்தை
நீத்திருக்க லாமோ நிலத்து. (86)

என்னதன்று நின்செயலே யென்றறிந்தால் யான்விரும்பி
யென்னவென்று வாய்திறப்பே னீசனே—யின்னமின்ன
மெப்படியோ நாயேனை யீடேற்ற வேணுமுனக்
கப்படியே பார்த்தருளு வாய். (87)

ஆகாத காரியஞ்செய் தாஞ்சுகமு மாங்கதனாற்
போகாத துக்கம் பொருந்துவது-யோகோ
வுரைக்கி லணுவுக்கு முயர்ந்தமா . மேரு
வரைக்கு நிகராய் மதி. (88)

ஆகம் பகையல்லா தன்றிப் பகையுண்டோ
மோகந் தவிர்ந்த முனிவோர்க்கிங்—கேக
னிருவ ரறியாத வீசனரு ளல்லா
லொருவரு முண்டோ வுரை. (89)

எடுத்தவுடற் கேய்ந்தகன்ம மெப்போது முட்டும்
விடுத்துவிட்டோ மென்பர் விழலர்—விடுத்த

வதுவன்றே யைந்துமல மாறூறு நீத்த
விதுவன்றோ யாந் துறவென்போம். (90)

அறியார் கனவினிலு மானந்த ரூப
மறியார் தமையு மறியா—ரறிவார்கட்
கில்லாத தீங்கே யெடுத்துரைப்பா ரிப்பாரிற்
பொல்லார் தலையிற் பொறி. (91)

தனையறியா ரீசன் றனையறியார் பாச
வினையறியா ரானந்த மேவார்—தனையுஞ்
சிட்டர்தமக் கில்லாத தீங்குரைப்பார் பொல்லாத்
துட்டர்தமக் குள்ள தொழில். (92)

தன்னை யறியார் தலைவன் றனையறியார்
முன்னை வினையின் முடிவறியார்—பின்னைக்
குருக்களென்று பேரிட்டுக் கொள்ளுவாக ளையோ
தெருக் கடனிலே சிலர். (93)

நெருப்பென்றால் வாய்சுடுமோ நெய்பாறேன் கண்டு
கருப்பென்றாற் றித்தியா காணீ—விருபபமுட
னீபிரம்ம மென்றுரைத்தா னீபிரம மாயினையோ
நீபிரமஞ் சற்குருவாய் நில். (94)

ஆகஞ் சிறைச்சாலை யக்கரணங் காவலாட்
போகம் புவனம் பொருந்துமிட—மோகோ
விதனிற் படுமுயிர்கட் கிடேற்ற மென்றோ
வதனுக் கரசே யரன். (95)

நான்பெரிய ரென்னுமதை நாடா தடக்குமவர்
தான்பெரிய ரென்றுமறை சாற்றியிடும்—நான்பெரிய
ரென்பார் சிறியா ரிவரல்லா திவ்வுலகிற்
றுன்பார் சுமப்பார்கள் சொல். (96)

அன்றே யரனுனக்கன் பாசங்க ளாங்தொழில்கள்
நன்றே சிவனு நடுவனே—சென்றருளில்
நிற்கச் சிலர்நரகி னீணிலத்திற் பேதமாய்ச்
சொற்கத் திருப்பதென்னோ சொல். (97)

நீதியில்லா மன்ன னிராச்சியமு நெற்றியிலே
பூதியிலா ராரேனும் பூரணமாஞ்—சோதி
கழலறியா வாசானுங் கற்பிலருஞ் சுத்த
விழல ரென்றே நீத்துவிடு. (98)

ஐந்தறிவாற் கண்டாலு மாரேது செய்தாலு
மெந்த விருப்பு வெறுப்பெய்தாலுஞ்—சிந்தையே
பார விசாரத்தைப் பண்ணாதே யேதேனுந்
தீர விசாரித்துச் செய். (99)

தில்லைவனங் காசி திருவாரூர் மாயபுர
முல்லை வனங்கூடன் முதுகுன்ற—நெல்லைவனங்
காஞ்சிகழுக் குன்றமறைக் காடருணை காளத்தி
வாஞ்சியமென் முத்தி வரும். (100)

நன்கருத்தே தென்கமலை ஞானப் பிரகாசனே.
என்கருத்தே வுன்கருத்தென் றெண்ணுமல்—நின்கருத்தே
யென்கருத்தென் றெண்ணியே யான்பட்ட துன்பமெல்லா
முன்கருத்தே தீர வறியும். (101)

காண்பதும்பொய் கேட்பதும்பொய் காரியம்போ லேயிதமாய்ப்
பூண்பதும்பொய் யெவ்விடத்துப் போகமும்பொய்—பாண்பாகத்
தோற்றியின்ப வெள்ளமாய்த் தோன்றியென்னுட் சம்பந்தன்
வீற்றிருப்ப தொன்றுமே மெய். (102)

ஆசையறுப் பாசம்விடா யானசிவ பூசைபண்ணாய்
நேசமுட னஞ்செழுத்தை நீநினையாய்—சீசீ
சினமே தவிராய் திருவாசகம் படியாய்
மனமே யுனக்கென்ன வாய். (103)

இறவாத வின்பவன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்
பிறவாமைவேண்டு மீண்டு பிறப்புண்டே லுன்னையென்றும்
மறவாமை வேண்டுமின்னம் வேண்டுநான் மகிழ்ந்துபாடி
யறவாநீயாடும்போ துன்னடியின்கீ ழிருக்கவென்றார். (104)

## சிவபோகசாரம் முற்றிற்று.

சிவமயம்.

# சிவஞானவிளக்கம்.

தன்னை யறிவித்தான் றானேதா னானபிரான்
என்னையறிய வியல்பிற்றான்—பின்னையொரு
தேவாரங் கண்டிலேன் றென்னன் பெருந்துறையான்
வாவாவென் றாண்ட வழக்கு. (1)

மெய்க்குருவைத் தேடு வெறித்த வெளிகாட்டும்
பொய்க்குருவைத் தேடிநீ போகாதே—நெய்க்குருகு
நாணாம னாடுங்கா னடுவெளியி லேநிற்குந்
தோணாமற் றோணுங் குறி. (2)

நானிருந்து வாழ்மனையை நாளளவே கைக்கொண்டான்
தானிருந்த பாழ்மனையைத் தான்றந்தான்—ஊனில்
கதித்துக் கொதித்தெழுந்து கான்மாண் டடையக்
கொதித் துற்றுப் பார்ப்பான் குரு. (3)

என்றான் சனன மெடுத்தீ ரெடுத்தக்கால்
வான்காணு மீசனை வாழ்த்துகிலீர்—ஊன்காயத்
தோடு முணர்கிலி ரோரெழுத்தை நன்றாய்த்
தேடும் பிறவியறச் சென்று. (4)

ஆறாதா ரத்தடுக்கு மைம்பத்தோ ரக்ஷரமும்
பேறா மசவைப் பெருந்தவமே—கூறாய
ஏகவெளி யாய்நிற்கு மிதயகம லத்தே
ஆகமுமா மைந்தெழுத்து மாம். (5)

அஞ்செழுத்து மோரெழுத்தா மைம்பதிற்பின் னொன்றாகும்
நெஞ்சகத்துள் ளோதரிக்கு நிர்ப்பரமா—மிஞ்சப்
பெறலாம் பதவி பிரமனுடன் மாலு
மறவாத வன்னியனார் மன். (6)

அவ்விட்டும் ஒவ்வை யழைத்துமதின் கீழே
உவ்விட்டு காரத்தி னுள்ளுதித்து—மவ்விட்
டுறிங்கார மாறிய மெய்வாசி யிட்டக்கால்
அறங்காணு மோரெழுத்திற் றாய். (7)

ஓரெழுத்தைக் *கொண்டும் உகார அகாரமாய்
பேரெழுத்தைக் கண்டேன் பிறைசூடுஞ்—சீரெழுத்தி
லுந்திக் கமலத் துதித்த வயனுமாலுஞ்
சிந்தித் தார்பெற்றார் சிவம். (8)

சந்தியென்றுங் காலையென்றுந் தர்ப்பித்து நீர்முகந்தீர்
எந்த விதமாக விறைக்குநீர்—சிந்தைதனி
லேந்துபே ருண்டங் காசானொருவ னுண்
டுந்தி நீரென்றோ டுரை. (9)

எல்லா வுயிர்க்குந் துணையா மிறையவனை
எல்லா விடத்திலு மேத்தாமல்—நல்ல
தவத்தைப் பெறலாஞ் சடாக்ஷரமே யுன்னில்
அவத்தைக் கிடம்வா ராதறி. (10)

அவ்வைப் படைத்த வெழுத்தரிக்கு முதலெழுத்து
மொவ்வாம லைந்துக் குயிரெழுத்து—மெவ்வயில்
வேரெழுத்தும் வித்தெழுத்து மெய்த்தேசிகா யெனக்கே
ஓரெழுத்துக் காங்கே யுரை. (11)

சிவத்தை யறியீர் சித்தறியீ ரொன்றாந்
தவத்தை யறிந்ததிலே தாக்காமல்—அவத்திலே
பேசார்பால் கொள்ளுகின்ற பித்தரே யுங்களின்
ஆசாரங் காசாகு மோ. (12)

நவ்வாலு மவ்வாலு நானழிந்து போகாமல்
சிவ்வாலு மவ்வாலுஞ் செத்தவா—யவ்வாகேள்
என்னைத்தா னாக்கிவைத்தா னிருக்கையிலே யெம்பெருமான்
பின்னைத்தா னாக்கிவைத்தான் பேறு. (13)

நகரத்திலே யுதித்து நகரத்திலே பிறந்து
நகரத்திலே திரிந்த நண்பரே—நகரத்தை
விட்டுப் பிரிந்தக்கால் வீட்டின்பங் காணலாம்
திட்டஞ் சிவமயமாஞ் சேர். (14)

மாயுகிறீர் வீணே மனத்திலிருக்கும் மந்த்
தேயு வறிந்துடனே சேராமல்—வாயுவைத்தான்
கும்பித் திருந்தாலுங் குடலு முடலுமுயிர்
வெம்பி யுடைந்து விழும். (15)

தண்ணீர்க்குட் பாவை தனையிழந்து நின்றாற்போல்
எண்ணிக் கண்மூடி யிருந்தோரே—தன்மை
யொளியோடி நின்றதுவு முண்மைசெய்தாற் பின்னும்
வெளியோடி நிற்பதுவு மே. (16)

வித்திலே வேரிருக்கும் வேரிலே பற்றிருக்கும்
அத்திலே நின்றங் கறியாதார்—கற்றதனால்
காண்போநா மென்று கனத்த திருவடியைப்
பூண்போநா மென்பதெல்லாம் பொய். (17)

அஞ்செழுத்தும் பத்தெழுத்தும் அவ்வும்உவ்வும் ஒவ்வுமல்லால்
மிஞ்சி யினியொன்று முதலெழுத்து—மிஞ்சச்
சிவஞான போதகமுஞ் சேர்ந்தபொருண் மூன்றுந்
தவஞானி சொல்லுவரே தாம். (18)

அப்புத் தெளிவு மாத்துமத்திற் கும்பியறும்
உப்புத்தேற்று வித்தையு மொன்றினு—லப்படித்தான்
தேற்றினுர்க் கல்லோ தீரும் பிறப்பதுதாம்
போற்றினுர்க் கென்னவரும் பொய். (19)

இராகுவென்னுங் கேதுவென்னு மிரண்டுபாம் புண்டதி
லிராகுவிலே கேது வுறங்காமல்—பராபரத்தில்
காட்டியுற்ற மந்திரத்தாற் கால்வீசி யுள்வீட்டில்
ஆட்டி யிருந்தா லிருக்கலாம். (20)

நினைத்து மறந்ததுவு நின்றதுவும் போனதுவுந்
தனைத்தானே யறிந்து சாராதார்—பினைத்தான்
சாத்திரத்தைப் பொங்கிவைத்த சட்டிதன்னைக் கிட்டவைத்துப்
பார்த்திருந்தாற் போமோ பசி. (21)

சொல்லு மெய்க்குஞ் சோதி யுதித்தவிடம்
அல்லும் பகலு மமர்ந்தவிடம்—நல்லோர்
முகமறிந்து தந்தைக்கு முன்னேதா னேக்கி
மகன் பிறந்து வந்தவகை. (22)

மாமிசத்தி லேயுதித்து மாமிசத்தி லேபிறந்து
மாமிசத்தை யுட்கலந்து மாள்வரே—மாமிசத்தைப்
பொய்யென்று மென்றுங் கொள்புருவ நடுவிணையை
மெய்யென்று மென்றுங்கொள் வீடு. (23)

தோப்பழுத்து வவ்வாலுந் துஞ்சறவே தின்றதற்பின்
மாப்பழுத்து வீணே மடிகிறதே—தோப்புடையோர்
இல்லாமல் மாவை யிருபொழுதுங் காப்பதற்கு
வல்லா னொருவ னில்லாமல். (24)

துறவ ரிறைவர் தொல்லுலகி னல்ல
பிறபலன்கள செய்தாற் பிடிக்குமோ—குறைவறவே
தன்பங்கந் தீர்க்க வறியாதார் சாத்திரங்கற்
றென்பங்கந் தீர்க்க வறிவார். (25)

எந்த வகைகொண் டீடேறப் போவீர்நீர்
விந்து நிலையறியா வீணரே—அந்தமில்லா
ஆண்ட குருவை யறிந்தா லறியலாம்
பூண்ட வகை யீந்தபொருள். (26)

சாத்திரத்தின் சார்பு தனையறிந்து நின்றுதான்
சூத்திரத்தி னுள்ளே சுருக்கிலே—பார்த்திருக்கக்
கோளெல்லாந் தீருங் குருவினருள் பெருகி
வாழ்கலா மென்று யகிழ்ந்து. (27)

வாய்பேசா தூமை வகையற்ற கோமளமாய்ப்
பேய்கொண்டு சிலமென்ன பித்தர்களே—தாய்முலைப்பா
லுண்டுசெத்த பிள்ளைகளுக் குண்டோ பலமோக்ஷம்
கண்டுகொண்டு செய்த .கதை. (28)

காயுங் கிழங்குங் கனியும் பலனென்று
மாயுகிறீர் தின்று மயங்குகிறீர்—காயத்துள்
கங்குல்பக லற்றவிடங் காணாத மூடரே
எங்கேநீ ரீடேறு வீர். (29)

தாயறிந்தாற் போலே சாத்திரத்தைச் சொல்லுவார்
தாயிருந்த பாழ்மனையைத் தாமறியார்—தாயிருக்கும்
அந்திபக லற்றவிடங் காணாத மூடரே
எந்தவகை யீடேறு வீர். (30)

கருவி கழலிடமுங் காயம் வருந்திடமும்
அருவு முருவா யமரிடமும்—மருவுவார்
அல்லும் பகலு மறுமிடமு மேயறிவால்
வல்லவர்கள் காண்பார் மதித்து. (31)

விட்டவிடந் தொட்டவிட மேவி யிருந்தவிடம்
கட்ட வறியாதே கழன்றவிடம்—வெட்ட
வெறுவெளியைக் காணாத வீணரே நீங்கள்
உறும்பொருளைத் தேட ருகந்து. (32)

காயங் கழன்றவிடங் கால்வீசி நின்றவிடம்
ஆய நிராமயமா யகன்றவிடம்—நேயத்தால்
குருவி னருள்பெற்றாற் கூடலா மந்த
நிராமயத்தி னின்ற நிலை. (33)

தொண்ணூறு மாறுஞ் சோதிதனைக் காட்டாமல்
எண்ணூ றிரண்டென் றிருந்ததுவே—நின்னூர்ப்
பறையைக் கடந்தவெளி பார்த்தேன்கீ ழொன்றுமில்லை
உரையிறந்து நின்ற விடம். (34)

போவாரீ யென்றவனார் பொய்யுமெய்யுஞ் சொன்னவனார்
ஆவா நீயென் றழைத்தவனார்—பாவாய் கேள்
உன்னைநீ பாரென்று னுற்ற னடுவணையில்
பின்னைத்தான் காட்டினான் பேச்சு. (35)

பூசையென்று சொல்லிப் புலம்பித் திரியாதே
பூசை கடந்த பொருளறியீர்—பூசைதான்
ஆதியோ வந்தமோ வஞ்செழுத்தி னைம்பதுவோ
தீதில்லா சற்குருவைச் செப்பு. (36)

கவ்வுண்டு நாசிமுனைக் காலால் கனலெழுப்பி
வவ்வுதனை யொவ்வாக்க மாட்டாமல்—தெய்வம்
ஒருவனே யென்பா ரொன்று நூறாகித்
திரிவரே வீணே தினம். (37)

நித்திரையிற் காகூதனை நிமைமூடிக் கண்டதுவுங்
குத்திரத்தங் காண்டனையுங் கூடாது—சித்தமதில்
கண்ணார நாட்டமிட்டுக் காலால் வழிதேடிப்
பெண்ணாரைக் கூடிப் பிழை. (38)

ஏதைநினைப்பே னினைந்தேதை யுரைப்பே னுரைத்
தேதை யனுதினமு மேத்துவேன்—தீதுதனை
மாற்றி யருளளித்த வாசியா னந்த
மூர்த்தி முதலளித்த முன். (39)

கொல்லன் றுருத்திக் குழறனிலே சுக்கிலந்தான்
மெல்லச் சுரோணிதத்தின் மேனடுவாய்—நல்ல
நடுவாகி நின்றானே நல்ல மலர்ப்பாதம்
இடமாக நீயிருப்புக் கோல். (40)

தாய்மடியி லேயிருந்து தகப்பன் றனையறியுஞ்
சேய்போ லறிவிருந்து சேர்ந்தாள்—ஆயமதில்
ஆனந்த மானமய மன்றமுத லின்றளவும்
தானந்த மாயறிந்த நாள். (41)

கருவாட்டை மெய்யென்று கதறித் திரியாதே
கருவாட்டைச் சுட்டெண்ணக் கருத்தறியீர்—பெருமாட்டிக்
கப்புறமாய் நிற்கு மானந்தந் தானறிந்தால்
இப்புறத்தி லொன்றுமில்லைக் காண். (42)

கண்ணுக்கு மெட்டாது கருத்துக் கடங்காது
விண்ணில் வெளியில் வெளிகாணும்—நன்றறிய
நற்குருவின் பாத நடமாடு மவ்விடங்காண்
இக்குருவை யக்குரு வாக்கும். (43)

காலை யறியீர் கண்டலையைத் தாமறியீர்
மேலைச்சுடலை நிலமே வறியீர்—ஆலயத்தைச்
சுத்தி வலம்வருவீர் தோத்திரித்துக் கைகூப்பும்
பித்தரே காணீர் பொருள். (44)

வெட்டவெளியிற் பிறந்து வெட்டவெளியை மறந்து
வெட்டவெளியிற் றிரிந்த வீணரே—நட்டம்
பயில்வாரு மங்கே பாழ்வெளியு மங்கே
கயிலாய மங்கே நீர்காண். (45)

அவத்தையினு ளுதித் தவத்தையினுற் பிறந்
தவத்தையினுற் றிரிந் தாள்வரே—அவத்தைச்
சருவத்திலு மிருக்குஞ் சற்குருவின் பாதம்
இருதயத்து நின்மலமா யேத்து. (46)

சலமூழ்கினுற் றவளைதான் கரைதா னேறுமோ
சலமூழ்கினுன் மூப்புத்தான் போமோ—மலமறுக்க
ஐயனருள் குரவ னவனிடத்திலே மூழ்கின்
மெய்யா நிலைக்குமே வீடு. (47)

சாதி பெரியதென்பார் தம்மைத்தாமே யறியார்
சாதி நிராமயத்திற் ருக்குமோ—சாதியை
நீத்தாற் பரவெளியி னின்றுநிலை காணலாம்
பார்த்தானைப் பார்த்தானைப் பார். (48)

குருக்களென்று சொல்லிக் குலாவித் திரியாதே
குருக்க ளளித்த குறிப்பறியீர்—குருக்களே

யெங்கே யிருந்தீ ரெவ்விடத்தே மெய்க்கொண்டீர்
அங்கே யிருந்த தறி. (49)

சாக்கிரத்தைக் கீழ்நோக்கித் தண்டு முனைநடுவில்
யார்க்குந் தெரியா தானந்தம்—நாக்கு
நுனிமேலே மூலமது நுண்ணறிவி லாதபொரு
ளணியறிந்து நிற்கவல்லர் யார். (50)

எச்சிலென்று சொல்லி யிதமகிதம் பேசாதே
எச்சி லிருக்கு மிதமறியீர்—எச்சிலை
உற்றிருந்து பார்த்தா லொருமை வெளிப்படுமே
நித்த நிராமய மாமே. (51)

யானை பணிரெண்டு மல்லுபக லோடினல்
சேனை தொண்ணூற்றறுவர் சேர்ந்திருப்பார்—யானை
நடவாம லேயிருந்தா னுமில்லை நீயுமில்லைத்
திடமாக நீயறிந்து சேர். (52)

வேதாந்தத் துண்மை விளங்கும் பொருளெல்லா
நாதாந்த வீடு நணுகாது—போதாந்த
மெய்க்குரு வீதென்று வெளியாக்கிக் காட்டினன்
பொய்க்குருவைக் காணேன் புரிந்து. (53)

இருவர் நடந்தவழி யேகாந்த சேவைகாண்
அரிய பொருளிருக்கு மவ்விடங்காண—தெரியா
தருள்குருவைக் கண்டஞ் செழுத்துந் தள்ளினல்
வருமே பரத்து வளம். (54)

விந்துவு நாதமு மேவுந் திருக்கூத்
தந்தத்தே நிற்கு மறியார்கள்—பந்தம்
பிறிந்தா லறியலாம் பின்னுமுன்னுந் தள்ளி
மறந்த விடத் திருக்கலாம். (55)

சதிரத்தைக் கோணமென்று தற்பரத்தைக் காணமல்
உதிரத்தை மெய்யென் றுணர்ந்தீரே—அதிர
நடந்த விடமுமங்கே நல்லவெள்ளத் தின்பம்
படர்ந்த விடமுமங்கே பார். (56)

சீலத்தி லேயுழன்று சிந்தை கலங்காதே
சீல நிராமயத்திற் சேராது—சீலத்தை
விட்டாற் பரவெளியில் வெட்டவெளி காணலாம்
சிட்ட ரிருக்குந் தெரு. (57)

மூத்த மகன்பிறந்தான் முந்திச் சுழியெழுத்தில்
பார்த்துத் தெளிவார் பலரில்லை—நேர்த்தியாய்
நல்லோ ரறிவார்க ஞாதாக்க ளுண்மைதனை
யெல்லோரு மறியா ரீது. (58)

நானும்பொய் நீயும்பொய் நல்ல சிவானந்தந்
தானுமெய் யென்றுகுரு சாற்றினான்—யானறிய
நடுவணையி னில்லென்றா னாதன் றிருக்கூத்தில்
திடமா யிருந்தேன் றெளிந்து. (59)

சாத்திரத்தைப் பன்னித் தலையடித்துக் கொண்டேன்யான்
கூத்திலருள் குரவன் கூடினான்—மூர்த்தி
யிருந்தவிடங் காட்டினா னேகாந்த வெள்ளத்
திருந்தவிடத் தென்னை யிருத்தி. (60)

அஞ்சு மலையி லதின்மேற் சுழியெழுத்தை
நெஞ்சி லழுத்திக்குரு நில்லென்றான்—பஞ்சமில்
மற்றவிட மேதென்றே னவ்விடத்தைக் காட்டினான்
சித்தத்திற் கண்டேன் றெளிந்து. (61)

தேரோடு தென்றுமெத்த செகமெல்லாம் போய்த்திரிவீர்
தேரோடு துள்ளே தெரியீரே—வேரோடி
நின்ற நிலையறிந்தா ணிற்பார் சிவானந்தம்
அன்றே மறபபா ரதை. (62)

பூசை யிறந்து புனலாடி மதியிறந்
தாசை யனுஷ்டான மதுவிறந்து—பாசத்தில்
நின்ற நிலையிருக்க வென்னை யிரவுபகல்
தன்னி லிருத்தினான் றான். (63)

அவத்தை பதினெட்டு மாதார மாறுங்
பவத்தொழிலைக் கீழ்படுத்திப் பாரென்றான்—சிவத்தில்

ஆடிஞு லானந்த மாதி பராபரைமேல்
மூடி யிருந்த முதல். (64)

பச்சைமரத் தாணிபோற் பாய்ந்திருந்த மும்மலத்தைத்
தச்சிருத்த மும்மலத்தைத் தாணீக்கி—அச்சமில்லாத்
தானீன்ற தற்பரத்தைத் தந்தருளி யென்றனக்குக்
கோஞகி வந்தான் குரு. (65)

என்னை யறியாம லற்றவிடத் தேயிருந்தான்
தன்னந் தனியனுய்த் தானிருந்தான்—என்னை
விழுங்கி யிருந்தபொருண் மோனந்த மானதுவே
பழுதில்லா நின்ற பரம். (66)

ஆசார மில்லை யசுத்தத்திற் சுத்தமுண்டு
பேசாத வின்பம் பெறும்பேர்கள்—கூசாமல்
கண்டவிடத் திருப்பார் கண்டவிடத்திற் பொசிப்பார்
கண்டவிடத்தே படுப்பார் காண். (67)

பெண்டாட்டி கொண்டு பெருக்கத் தவித்தேனை
கொண்டாள வந்தான் குருநாதன்—அண்டமெல்லாம்
பொய்யடா வென்ருன் புருவநடு வணையில்
மெய்யடா வென்ருன் விரைந்து. (68)

கனக சபைதேடிக் கலங்கித் திரியாதே
கனகசபையும் முள்ளே காணீரே—அனுதினமும்
தானிருந்து நின்றநிலை தற்பரத்தைக் காட்டிஞு
ஞனிருந்து நின்ற நலம். (69)

வெந்த விடங்கண்டேன் விமல னிருந்தவிடம்
அந்திபக லற்றவிட மவ்விடங்காண்—சிந்தைதனில்
எங்கு மிருந்தபொரு ளென்னிடத்தி லேகண்டேன்
கங்குல்பக லற்றவிடங் காண். (70)

கண்டதெல்லா மறையுங் காணுதெல்லாம் பிரமம்
உண்டதெல்லா மலமா மொன்றுகேள்—துண்டம்
பிறிவை யறியுங்கள் பேச்சுரையு மல்லா
அறிவை யறியுங்க ளென்று. (71)

இறப்பும் பிறப்பு மிறவா திருந்தவொன்று
சிறப்புடையோர் காண்கின்ற தேவே—மறப்பில்லா
நாட்டத்தைப் பற்றிநின் றானல்ல சிவானந்தம்வரும்
கூட்டி யிருக்குங் குறி. (72)

கிரியை யதிகமென்று கேடுபட்ட மாண்பரே
அறிவை யறியா வசடரே—கிரியையுள்
சிற்பரத்தைக் கண்டக்காற் சிந்தை தெளியுமே
யுற்பரத்தைக் காணீ ரொளி. (73)

சீயெழுத்தி னாலுதித்துச் சீயெழுத்தி னாற்பிறந்து
சீயெழுத்தி னாற்றிரிந்த செல்வரே—சீயெழுத்தைப்
பெற்றெழுத்தைப் பாருங்கள் பேசாப் பெரும்பேறும்
உற்றவிடம் பாருங்க ளொன்று. (74)

சிவனொருத்த னுண்டென்று தேசமெல்லாம் போய்த்திரிவீர்
சிவனொருத்த னும்முள்ளே தேடீரே—அவமதிகள்
மலையின்மே லேயிருந்த மலையைக் காணாரென்பீர்
நிலைமை யறியீர் நெறி. (75)

பெற்றாற் பேறில்லை பிறவாதாற்பேறுண்டு
கற்றார்கள் பெற்றார் கடும்பேறு—கற்றதாற்
கண்டு தெளியுங்கள் காணாத மூடரே
கொண்டென்னைச் சொன்னான் குரு. (76)

கல்விலுஞ் செம்பிலுங் காயிரும்பில் வெண்கலத்தில்
உல்லாச மாகநீ ரூட்டுகிறீர்—நல்லார்
பகலு மிரவும் பதிநடுவி லூட்டுங்கள்
சகலகுரு சொன்னார் தரம். (77)

ஓசை பரிச முருவஞ் சுவைநாற்றம்
ஆசை யடங்குமதை யறியார்—பாசத்
திருளை யறிந்தா ரெவ்விடத்தை யுற்றதென்
றருளறிவி னாலறிவா ராய்ந்து. (78)

கோல்காட்டு வானுசான் சீஷன் குருடனைப்போல்
மேலே வெளிகாட்ட வெளிகண்டேன்—சீலத்
திருந்தபொரு ளீதென்று னேகாந்த மாக
மருள்கெடுக்க வந்தார் மகிழ்ந்து. (79)

தன்சரிரங் கெடுத் தர்ப்பணமு மர்ச்சனையும்
உன்னிச் சிவபூசை யூன்கெட்டுப்—பன்னுமறை
பாசத் திருள்கெட்டுப் பராபரத்தி லொன்ருக்கி
னேசத் திலாசா னெறி. (80)

தீர்த்தங் கொடுத்தவனுர் தீர்த்தவடி கொண்டவனுர்
மூர்த்தி குருவாய் முளைத்தவனுர்—தீர்த்தத்தி
லிங்கத்தி லூட்டியே யிந்தாவென்றே கொடுத்தார்
லிங்க மறியா ரிதம். (81)

அந்த முகமறியீ ரதனு ணிறமறியீர்
சிந்தை யறிந்தூடச் செயலறியீர்—எந்தவிதம்
அய்யோ வரனை யறியாத மூடரே
செய்யும் வகைதா னறிந்து சேர். (82)

அகாமுத ஞதத் தடங்கிநின்ற லிங்கத்தில்
சிகரமுதலாய் நடனஞ் செய்ததே—புகலும்
அசவை யறியா வசடரே நீங்கள்
மசகமே காணீர் மதித்து. (83)

ஏனென்ற சத்தம தெங்கே யிருந்ததடா
நானென்று சொன்னவிட நாட்டமெங்கே—கோனை
யறிவா லிறிந்தக்கா லவ்விடத்தைக் காட்டுவான்
குறியா யிருந்த குரு. (84)

துடக்கே யசூசமென்று தூரத்தே நின்றீர்
துடக்கு மிருக்கிறதும் மிடத்தே—துடக்குச்
சடத்தி லிருந்மதஞ் சற்குருவாய் வந்தபொருள்
அடக்க முடையீ ரறி. (85)

அவ்விடத்தி லேயிருந்து மங்குடுத்தும் பிண்டமா
யவ்வெழுத்தி னூற்சடல மானதே—அவ்வெழுத்தைத்
தள்ளிப் பராபரைமேற் சச்சிதானந்தவெள்ள
மெள்ள வழுந்தீர் விரைந்து (86)

எட்டாத கொம்பி லிருக்கும் பராபரத்தை
முட்டாக்குப் போட்டொருபெண் மூடினள்—கிட்டிக்
கருந்துறையை யுண்டுமிழ்ந்து காட்டினு னென்றனக்குக்
குருவாகி வந்த குறி. (87)

ஊனெடுத்த பேர்க்கெல்லா முணர்வுநிறை பேரின்பம்
நானிடத்தி லேயிருந்த நட்டமெங்கே—கோனேதான்
உள்ளும் புறப்பு மொடுங்கு நடுவணையில்
மெள்ள விருப்பான் விரைந்து. (88)

நிராமயமாய்நின்றபொரு ணோரிமையா டன்மேல்
குராமயமாய் நின்று குலாவித்—தராதலத்
தெறும்புகடை யானைமுத லெவ்வுயிர்க்கு மேலா
யுறுமுதலைக் காணீ ருகந்து. (89)

உழுது சடமெடுத்த வூமையரே கேளீ
ரழுதாற் சடத்துக் கூட்டலா—மழுதால்
சிவனை யறியலாஞ் சிற்சுருபங் காணலாம்
அவனை யணைந்தே யறி. (90)

குருநாவே தாண்டவக்கோன் சீஷன் செவியோனி
அருணும முற்பத்தி யானதுவே—யருள்கொடுத்து
மும்மலத்தை வாங்கியன்னை மோனந்த வெள்ளத்தில்
அம்பலனு யானமுந்தி னேன். (91)

பூசைப் பேய்க்கொண்டு புவியடங்கலும் பேயாய்
பாசப்பேய் கொண்டு பதையாதே—நேசத்
திருப்பானைப் பாருங்க ளிம்மை மறுமையில்லாக்
குருபாதங் காணுங்கள் கொண்டு (92)

என்னிடத்தில் வந்தானீ நானுமொன்று காண்
பின்னமற வொன்றாய்ப் பெறலாமே—உன்னறிவி
லறியா திருந்தபொரு ளாசானிடத் திருக்குங்
குறியா யறிந்தவனைக் கொள். (93)

உள்ளும் புறம்பு மொருவ னிருந்தவிட
முள்ளும் புறம்பு முயிர்நடுவில்—எள்ளெண்ணெய்
போலே யிருப்பான் புலியடங்கலு முயிரின்
மேலே யிருப்பான் விரைந்து (94)

அரைத்த மஞ்சள்போற் பற்றுமாத்து மாவின்னறிவு
உரைத்தான் பொருளொன் றுபதேசங்—கருத்தை
ஒன்றாக்கி யானந்தத் துள்ளழுத்தி மேல்வீட்டில்
நின்றே னனுபோக மாய். (95)

எங்குந் திரிந்தலுத்தே னிருவினையி னன்மயங்கிப்
பொங்குஞ் சிவபோகம் போதித்தான்—கங்குல்பக
லற்றவிடங் காட்டியென்னை யதனு ளழுத்தினான்
பெற்றேன் பெரும் பேறுதான். (96)

திருவம்பலக் குரவன் றேசிகனைக் கண்டால்
கருவம்பலத் தொளிக்கக் காட்டானோ—உருவாய்
எடுக்காத பேரின்ப மேகாந்த வெள்ளத்
தடுக்கடுக்கா யிருத்தினான் சொல். (97)

சிற்சுருப மான திருவம்பலக் குரவன்
மெய்ச்சுருப மானவெளி யுள்ளே—தற்சுருபம்
காட்டி யருளளித்துக் கங்குல்பக லற்றவிடம்
மூட்டி யென்னையழுத்தி னான். (98)

அனுஷ்டானம் பூசை யஞ்செழுத்துமே தொழில்காண்
முனித்தான வெள்ளத்தின் மூழ்கீரே—யினித்தான்
குருபரனைச் சேர்ந்தக்காற் கூடலாம் பின்னை
யிருவருமா யொன்றா யினி. (99)

கண்டவிடங் கேட்டவிடங் கருத்தி னினைந்தவிட
முண்டவிடம் பரிசத் துறைந்தவிடம்—பிண்டத்
தறிவிப்பா னாசா னவனருளைப் பெற்றால்
குறியாகி நிற்கலாங் கொண்டு. (100)

சுக்கிலத்தை விட்டுச் சுரோணிதத்தி னாற்கட்டி
மிக்கசட மெடுத்த வீணரே—மெய்க்குருவைக்
கண்டாற் பரமபதங் காட்டுவா னாசான்
உண்டாற் பரபோக மாம். (101)

ஆசார மில்லா ரறிவில்லார் தர்மமில்லார்
தேசாப வாசமாய்த் திரிவார்—தேசத்
திருளைப் பிறிந்தறியா ரீடேற மாட்டார்
குருவை யறியார் குணம். (102)

உன்னி யிருக்கு மொருபொருளைத் தேடாமல்
பின்னையொரு தெய்வம் பிதற்றுகிறீர்—இன்னம்
அறிவானைக் கொண்டே யறியுங்க ளாசான்.
பிறவாத வின்பத்தின் பேறு. (103)

தேறவில்லை தேசந் தெளியவில்லை சிந்தைசற்றும்
ஆறவில்லைக் கன்ம மகலவில்லை—கூறரிய
தேரடிக்கே நின்று திகைக்கிறது செய்வதென்ன
மாரடிக்கக் கண்ட மனம். (104)

தன்னை யிழந்தோர்வாழ்வு சச்சிதா னந்தத்தே
யெந்நூலின் யானுரைத்த தெத்தன்மை—மன்னுலகில்
பானு மிருளோட்டும் பண்பதுபோன் மின்மினி
தானு மிருளோட்டுமோ தான். (105)

சமையம் பனிரெண்டிற் றங்கு நிராமயத்தைச்
சமையம் பிறித்தவர்க டாமறியார்—அமையாமல்
ஓடித் திரிந்தே யுலையாதே யுன்னறிவில்
தேடி மனத்துள்ளே தெளி. (106)

அஞ்செழுத்து மூன்றெழுத்து மைம்பத்தோ ரக்ஷரமும்
பஞ்சைகா ளென்னிப் பதையாதே—நெஞ்சி
லழுத்துங்க ளாசா னவனருளைப் பெற்றால்
எழுத்தைவிட் டேகாந்த மாம். (107)

நாடிச் சிவபதத்தை நம்பாதே சிற்பரைமேல்
ஓடிக் குருபதத்தை யுட்கொள்ளீர்—தேடித்
திரியாதே தேசமெங்குஞ் சிற்றம்பலத்தை
அறியவே நின்மயமா மன்று. (108)

பாலைக் குடித்துப் பலகனியைத் தின்றாலென்
சீலக் கிரியையிலே சேர்ந்தாலென்—மூலத்
திருந்த பொருள்காணுத வேழைகா ணீங்கள்
பருத்தி பட்ட பாடுபடீர். (109)

குன்றிற் கிடந்து குகையிருந்து கோலங்கள்
பன்னித் திரிந்தாற் பலனுண்டோ—நன்றரிய
ஆசானைக் கண்டே யவனருளைப் பெற்றக்கால்
பாசங் கடந் திருக்கலாம். (110)

புற்றின்று பால்குடித்துப் போந்த சருகுதின்று
கற்குகையி லேயிருந்து கண்டீரோ—சற்குரு
மறவாம லேயிருந்தான் மாண்டவிடங் காணலாம்
பிறவாத வின்பத்தின் பேறு. (111)

உரையிறந்து நின்றவிட முமபர்க்கு மெட்டா
கரைகடந்த வின்பவொளி காட்டிப்—பரையிறந்த
பாழ்வீட்டுக் குள்ளே பராபரனும் யானுமாய்
வாழாமல் வாழ்ந்தேன் மதித்து. (112)

ஆவென்று சொன்ன சத்தமங்கே யிருந்ததுகாண்
ஓவென்று வீசினது மோங்காரம்—வாவென்று
பாழ்வீட்டுக் குள்ளே பதையாமலேயமிழ்ந்தேன்
வீழாத வின்பத்தின் (113)

துரிய மறந்து சொல்லிறந்த தூய்வெளியைக்
குரவன் வழிகாட்டக் கூடினேன்—இரவுபகல்
அற்றவிடங் காட்டி யென்னையதனு ளழுத்தினான்
சத்தங் குவிந்தவிடந் தான். (114)

உற்ற சமையம் பன்னிரண்டி லுத்தமனைப்
பெற்றவர்கள் கண்டிருப்பார் பேசார்கள்—எத்தால்
அரிய பொருளறிய வநேகநாள் செல்லுமே
விரிந்து குவிந்த விடம். (115)

கொல்லனுலை யிரும்பிற் குருநீர்தான் சுவறிதலத்
தில்லைத் திரும்பா சீர்மைபோல்—நல்ல
சிவஞானி போய்த்திருப்பாச்சித்தத் தயிக்கமாய்
அகம்போகா தென்றே யறி. (116)

அரங்கொண் டிரும்பை யறுக்கின்ற வாறுபோல்
குரவன் மலமறுத்துக் கூட்டுவான்—திரமுடனே
ஐந்தொழிலு நட்ட மாறாதாரம் நட்டம்
சிந்தையுட னவ்விடத்தே சேர். (117)

சைவர்க்குச் சுந்தர னுண்டு சங்கமர்க்கு
மெய்யாக வாசூச மில்லைக்காண்—மையரவம்
பூண்ட பரமற்கில்லை பொருளறியா மூடரே
ஆண்டவனைக் கொண்டே யறி. (118)

நானென்று நீயென்று நாடின தொன்றென்றும்
ஏனென்ற தொன்று மியம்பக்கேள்—தானின்று
சொல்கிறது மாகிச் சுகமு மவனாகிப்
பல்விதங்க ளாகும் பரம். (119)

அண்டாண்டங்களுக்கு மணுவாகி நின்றபிரான்
தொண்டருக்கு நன்றாய்ச் சுகமாகிக்—கண்டுதொழ
அந்தக் கரண மடக்கி யதின்மூழ்கிப்
பந்தம் பிரித்திருப்பார் பார். (120)

## சிவஞானவிளக்க முற்றிற்று.

சிவமயம்

# சித்தாந்த சாரம்

S. அனவரதவிநாயகம் பிள்ளை அவர்கள்

பரிசோதித்தது.

சாது அச்சுக்கூடம்,
இராயப்பேட்டை, சென்னை

1939

# முன்னுரை

தசகாரியங்களை முப்பதவதாரத்து வைத்துக் கூறும் **சித்தாந்த சாரம்** நாற்பத்தைந்து ஆண்டுகளுக்குமுன் அச்சிடப்பட்டது. அப்பதிப்பில் அது ஸ்ரீ பரமமுனிவர் இயற்றியதாகக் காட்டப்பட்டது. அப்பதிப்பு பிழைகள் நிறைந்திருந்தமையாலும், நூல் சிறந்ததாகக் காணப்பட்டமையாலும் அதனைத் திருத்திப் பதிப்பிக்க எண்ணிச் சீகாழி வித்துவச் சிரோமணி ப. அ. முத்துத் தாண்டவராய பிள்ளையவர்களை யுசாவியபொழுது அவர்கள் இந்நூலுக்குக் கையெழுத்துப் பிரதி யொன்றனுப்பியதோடு இங்கிருந்து அனுப்பிய 'புரூ'பைத் தருமபுரம் ஆதீனம் அடியார் குழாத் தொருவராகிய வித்துவான் சட்டைநாத முனிவரவர்கள் பிரதி, திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்துப் பிரதி, சீகாழி ஸ்ரீ ச. சதாசிவ முதலியாரவர்கள் பிரதி, தம்மிடத்துள்ள பிரதி என்றிந்நான்கோடும் ஒப்பு நோக்கிப் 'புரூப்' திருத்தமாயிருத்தலை யுணர்த்தி யூக்கியும், 'இம் முத்திநிலை காழிச் சிற்றம்பல நாடிகள், காழித் தத்துவப் பிரகாசர், கமலை ஞானப்பிரகாசர் முதலிய பெரியோர்கள் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் கூறிய நூல்களின் சாரமாகத் தருமபுர ஆதீனத்து ஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய' தென்றும், 'இப்பரமாசாரிய ரது சரித்திரம் காசித் திருவருட்பா என்னும் நூலின் முகவுரையுட் காணப்படுவ'தென்றும் தெரிவித்தும் உதவி புரிந்தனர்.

தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்னும் தசகாரியங்கள் **உண்மைநெறிவிளக்க** மென்னும் சித்தாந்த நூலில் விளக்கப்பட்டன. **துகளறுபோதம்**, 4-வது முதல் 8-வது செய்யுள்வரை, பூதப்பழிப்பு, பொறியறவுணர்தல், அந்தக்கரணசுத்தி, கலாதி ஞாக நிராகரணம், சுத்ததத்துவதூடணம், தத்துவாதீதம், சகலதெரிசனம், கேவலம், கேவலதெரிசனம், கேவலாதீதம், தன்னுண்மை, சைதந்நிய தெரிசனம், ஞானதெரிசனம், பரைதெரிசனம், பரையில் வியாத்தம், பரையில் யோகம், பரையில் போகம், சுத்தபராயோகம், சாக்கிரம், சாக்கிராதீதம், பரை

ரதீதம், சுத்தாவத்தை, சுகரூபம், சுகாதீதம், சிவப்பேறு, பரா னந்ததெரிசனம், பரமானந்தயோகம், பரமானந்தபோகம், பரா னந்தமேலீடு, பரமானந்தவவசம் என்னும் முப்பது அவதாரங் ளைக் கூறிற்று. **தத்துவப்பிரகாசம்**, 243-வது முதல் 302-வது சய்யுள்வரை, பஞ்சபூதப்பழிப்பு, பொறியறவுணர்தல், அந்தக் ணசுத்தி, கலாதிஞானநிராகரணம், சுத்ததத்துவதூடணம், த்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, கேவலம், கேவல ரிசனம், கேவலாதீதம், ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஞானதரி னம், ஞானாதீதம், பரைதரிசனம், பரையோகம், பரைபோகம், ராதீதம், சாக்கிராதீதம், சுத்தவத்தை, சுகரூபம், சுகாதீதம், சிவ பம், பரமானந்ததரிசனம், பரமானந்தயோகம், பரமானந்த பாகம், ஆன்மலாபம், பரமானந்தமேலீடு, உலகப்பழிப்பு என்னும் ப்பதவதாரங்களைக் கூறிற்று. **சித்தாந்தசாரம்** பெரும்பான்மையும் **ந்துவப்பிரகாசத்தைத்** தழுவி யுரைத்தது.

இனி, 'முப்பது வகைப்படு முத்தி நன்னெறியினைச், செப்புவ ரமைத்துத் தெச காரியத்தில்' என்று தொடங்கிய **சிவானந்தபோத ர** மென்னும் சித்தாந்த சாத்திரத்திற்கு உரை யெழுதியவர் அந் ால் **துகளறுபோதங்** கூறும் முப்பதவதாரத்தையும் முத்திச்சகலம், தப்பழிப்பு, பொறியறவுணர்தல், அந்தக்கரணசுத்தி, கலாதிஞான ிராகரணம், சுத்ததத்துவதூடணம், பிராணவாயுநீக்கம், கேவலம், கவலநிலை, திரோதானசத்தியின் தெரிசனம், இச்சாசத்தியின் தெரிசனம், கிரியாசத்தியின்தெரிசனம், ஞானசத்தியின்தெரிசனம், நானாதீதம், ஆன்மரூபம், ஆன்மதெரிசனம், பரைதெரிசனம், பரை ில் வியாத்தி, பரையோகம், பரைபோகம், ஆன்மசுத்தி, சுகரூபம், காதீதம், சிவரூபம், சிவதெரிசனம், சிவயோகம், சிற்பரானந்த தெரிசனம், சிற்பரானந்தயோகம், சிவபோகம், உலகப்பழிப்பு எனத் சகாரியத்தில் அடக்கிச் சொல்லுவதாக உரைத்தார். முத்திநெறி முப்பதவதாரத்தையும் விளக்கும் இச்**சித்தாந்தசார**த்தை ஓதியுணர விருப்புடையார் மேற்குறித்த மூன்று சித்தாந்த நூல்களையும் உடன் கொண்டு ஓதி யுணரப்புகுவாராயின் பெரும் பயனெய்துவர்.

உ

சிவமயம்

# சித்தாந்தசாரம்

## காப்பு - வெண்பா

மூவாத முத்திநெறி முப்ப தவதாமுந்
தேவா கமத்தின்வழி செப்பவே—மேவித்
திசைவதனத்[1] தான்றனக்குஞ் சீதரற்கு மெட்டாக்
கசவதனத்[2] தான்சரணங் காப்பு.

## நூல்

கண்ணுதலோ னருள்புரிந்த வேதாக மங்கள்
கருதரிய புராணங்க ளியாவையினுங் கருத்து
நண்ணரிய பதிபசுபா சந்தெரித்த லாகு
நலங்கொள்பதி யேதுலக வியல்பே தென்னிற்
றிண்ணமுறு மாயைதான் சடமாகி யருவாந்
திருந்துருவாய் வரமாட்டா சீவனுஞ்சேர்ந் தறியான்
மண்ணதுதான் கடமாகா குலாலன் வேண்டு
மற்றதுபோ லிறைவனுளன் மாயைநடத் திடவே. (க)

அப்பதிதான் பரமான[3] வானந்த மயமா
யசலமாய் நிராமயமா யமலமா யருளா
யொப்பிலதா யருவுருவாய் ரூபா ரூபத்
தொருமுதலா யவைகடந்த வொளியாகி வெளியாய்த்
தப்பில்பரி பூரணமா யனந்த கோடி
தருமண்டப் பரப்பனைத்து முட்புறம்பாய்த் தனுவா
மெய்பொருட்கு முள்ளீடாய் வாக்குமனங் கடந்த
வின்பாகி யணுவிலணு மகத்தினுக்கு மகத்தாம். (உ)

---

பா - ம்—1தெரிவதனத். 2கரிவதனத். 3பரஞான.

ருள்விழிபோ லாணவத்தா லறிவிழந்து பசுவா
 யிருதமயக் கால்வினைக ளீட்டியதற் கேற்ற
நமருவி நரகசுவர்க் கம்புவியிற் சுழன்றே
 யுடல்பொறிகள் மாறிக்கொண் டுழ்வழியா லூட்டுங்
நவருளை யிழந்தேக தேசியுமாய்ச சித்தாய்ச்
 சிற்றறிவா யணுவாகிச் சீவனுயிர் பிராணன்
நடனெனும் பெயர்பெற்று மலபாகத் துயிர்கள்
 பூதகா யகனருளாற் பூரணத்துற் றிடுமே. (௩)

ணவஞ்செம் பிற்செறிந்த களிம்பு போலு
 மழன்றகன லடக்கியிடுங் காட்டம் போலும்
னுமுயிர்க் கனுதியா யறிவுதொழில் மறைந்துப்
 போதமுற வுயிர்க்குயிரா ம் பொருளையறி யாம
னொறிசே ருலகியற்கைப் பொய்யினைபெய் யாக்கி
 நிறைபுலன்கள் வழிபோகம் புசித்திடவே நிறுத்தி
ரணுயிர்கள் பலவிதத்தாற் சத்திகளும் பலவா
 யிரவிகதிர் முன்னிருள்போ லருள்பெறினீங் கிடுமே.

டல்மேவுஞ் சிவனெங்கு நிறைந்திருப்ப னன்மா
 வப்பொருளை விடான்பழமு மிரதமும்போ லென்றீர்
மேவு மலமுயிரைத் தடிப்ப தெங்கே
 சாதகமாய்த் தேசிகனை சாற்று கென்றாய்
ல்போலுஞ் சிவன்கடலிற் புனல்போலு மான்மா
 கரியமலந் தண்ணீரி லுப்புப் போலுந்
மேவு முப்பந்தக் கடலுக் கில்லை
 சிற்றுயிர்க்கே மலமிறையைச் சேர்ந்தி டாவே. (௫)

ர்னமுங்கே ளாகாயத் தேவாயு நிற்கு
 மிலங்கியநற் கந்தங்கள் துர்க்கந்த மெல்லாந்
ன்னரிய வாயுவுக்கே யன்றி யந்தச்
 சுடர்விசும்பு தனக்குண்டோ துடர்ந்தவா ணவத்தின்

மன்னுமறி யாமையினு லிதாகிதமாங் கன்ம
 மற்றதனுற் றுக்கசுகம் புசிக்க வேண்டிப்
பின்னுடல்மா யையிலுண்டா முண்டாக வெல்லாப்
 பிணிப்புமுயிர்க் கேயந்தப் பெருந்தகைபா லுருவே. (சு)

அருளிலுயிர் கூடுநெறி முப்பதவ தரமா
 மவைபூதப் பழிப்புடனே பொறியறநின் றுணர்த
னிரையந்தக் கரணசுத்தி கலாதி ஞான
 நிராகரணஞ் சுத்ததத்வ தூடணமே பிராணன்
பரவுதத் துவரூபந் தரிசனந்தற் சுத்தி
 பணியுறுகே வலமந்தக் கேவலத்தைக் காண்டல்
விரிகேவ லாதீத மான்ம ரூப
 மிருமான்ம தரிசனம்பின் ஞானதரி சனமே. (எ)

பகர்ஞானு தீதமப்பாற் பரைதரிச னஞ்சொற்
 பரையோகம் பரைபோகம் பரையிலதீ தந்தான்
றெருசிவனற் றரிசனஞ் சாக்கிரா தீதஞ்
 சுத்தவத்தை சுகரூபந் துலங்குசுகா தீதந்
திகழ்சிவப்பே றுன்மசுத்தி பரமா னந்த
 தெரிசனம் பின்பரமா னந்த யோக
மகல்பரமா னந்தபோக மான்ம லாப
 மானந்த மேலீடு சகம்பழித்த லாமே. (அ)

பிறங்குபூ தப்பழிப்புப் பகருங் காலை
 பிருதிவியப் புத்தேயு வாய்வா காய
நிறங்களொன் றுக் கையைந்தாய்ப் பரிணமித்தா லுடம்பா
 நின்றுணும்போ கங்களெல்லா முடலான்மா வென்று
யுறங்கிடுங்கா லறிவிலைக்கா ஞருபொறியிற் றுக்க[1]
 வுற்றறியு மென்றுய்பின் னுயிர்போனுற் பிணமாய்ச்
சிறந்துளோர் கட்டையினிற் புரட்டிவீழ்த் துருட்டித்
 தீக்கொளுவச் சுட்டதென்று திரும்பக்காண் கிலையே.

---

பா . ம்—1ஞருபொறி யொன்றுக.

ஏழிடமாய் நின்றுநடத் திடச்சுத்த மாயை
யெழில்வாக்கு நான்கினால் வசனாதி விரிக்கத்
தாழ்வில்சூக் குமபஞ்சாக் கரத்தி னாலே
தருகரணங் களையுமெழுத் துலவரய றவ்வால்
வீழ்பொறிபூ தங்களையு நடத்த விந்த
விரிவெல்லாம் பதங்கள்புவ னங்கள்கலை கலந்து
வாழ்வுபெறத் தனித்தனிநின் றியக்க விந்த
வகையுலகந் தொழிற்பட்டு வருதல்சிவன் றொழிலே.

என்றுமரு ளான்மாவை நடத்தல் கேளா
யிந்திரியங் களையுமந்தக் கரணங்க டமையு
நின்றறிய வுயிருணர்த்த வறிந்துடனாய் நிற்கு
நெறிபோல வுயிர்ப்போத மறிவிக்க வறித
லன்றியே சிவபோத முடனாய்நின் றுணர்த்த
லாதலா லருளன்றி நமக்கொர்செய லிலைநா
மின்றளவு நமதுதொழி லென்றதெல்லா மருளோ
வென்றுருகி யவ்வருளைப் பிரியாம லிருநீ. (கஅ)

அறிவுபற்றி நீயிருந்தால் விடியற் காலத்
தருணவுத யம்போல வரவுகதிர் விழுங்கிப்
பிறியுமா போலவொளி மெல்ல மெல்லப்
பெருகுங்காண் மனக்கவலை யற்றுக் காண
வுறுதிரோ தாயிமறைத் தனக்குக் காட்டு
மொளிஞான தரிசனமா மசைவிந்து நாதம்
பெறுமாதா ரங்கள்பிரா சாதவேதா கமங்கள்
பின்யோகத் தாலொளிகள் பெறிற்பிறப்பாய் விடுமோ.

உலவியஞா னாதீதஞ் சிவஞா னத்தி
னுள்ளொடுங்கி யதன்வசமா யுன்வி காரம்
பலவுமற விருத்தலாம் பரைதரிச னங்கேள்
பகர்ஞான மிகுந்ததனுட் புக்கவொளி யெங்கு

நிலவியே பொதுவாக நிறைந்தெழுங் கதிரோ
னீடொளியுச் சிக்காலத் தெங்குநிரந் தரமாய்க்
குலவுதல்போற் புரையறநின் றிடுத லாகுங்
கூறியவிப் பரைவியாத் தம்புகலக் கேளே. (உ0)

சாற்றுபரை திரோதைமுத லனேகமரு வுருவாஞ்
சத்திகளாய்ச் சிவனுக்கு வடிவாகிக் கரணந்
தேற்றுகுண மிந்திரியந் தொழில்க ளாகிச்
சேர்ந்தசாங் கோபாங்க மாகியிருப் பிடமாய்ப்
போற்றரிய சரீரக்கிவ் வுலகமா யளிக்கும்
பொருளாகிப் பீடலிங்க மாதல்பரை வியாத்த
மாற்றரிய பரையிலுறை யாதுநெகி ழாமல்
வசமாகத் தனைமறைய நிற்றல்பரை யோகம். (உக)

கண்டயோ கப்பயனும் விளைந்தமணி யோசை
கடலோசை யாழோசை சேகண்டி யோசை
வண்டோசை மதயானை பிளிறோசை நாத
வகையோசை கொம்போசை வந்து தோன்றி
லுண்டான பரைபோகம் பரையிலதீ தந்தா
னோசையெலா மழியவதி னுருகியிருப் பதுவா
மண்டுசிவ தரிசனமிக் கேடபடா விமல
வளரொளிக்குள் ளொளியாகச் சிவத்தைக்காண் பதுவே.

சொன்னபரை யொழியவொரு பொருளுண்டோ விந்தச்
சுடரொளிக்குள் ளோபுறம்போ விதனொடுகூ டிடுமோ
வென்னவே திகைத்திடுதல் சாக்கிரா தீத
மிதிலவத்தை யைந்துண்டு சுத்தவத்தை யாகு
மன்னுமா ணவமாதல் சிவவிழப்பு மாயை
வாய்த்ததனு கரணபு வனபோக மாகுங்
கன்மமறம் பாவமாய்ச் சுகதுக்கங் காட்டுங்
கருதுமா மாயையைந்து காரணர்க்கு மெய்யாம். (உ௩)

அத்தகுமா யையைநடத்துந் திரோதாயி மறைத்தே
யமர்ந்தூட்டு மலமைந்துங் காட்டும் ஞான
சத்தியிட மாப்பூர்ண போதமாய் நிற்றல்
சாக்கிரம்பூ ரணபோதம் நிருவிகா ரமதாய்ச்
சுத்தபரை முதலாத னின்மலசொற் பனமாந்
தூயபரை போகத்திற் போதமற வழுந்த
லொத்தநின் மலசுழுத்தி பரைபோக மழித்தெழுந்த
வுயர்பரமா னந்தத்தில் முதலாதல் துரியம். (உ௪)

பரமானந் தந்தனிலே சுட்டறநின் றதுவாய்ப்
பார்த்திடனின் மலதுரியா தீத மாகு
மருட்பரைக்குஞ் சிவனுக்கு முவமை கூறி
லாதித்தன் சிவன்போலு மதன்கிரணம் பரையா
நிரைமனவாக் கிறந்தசிவ மதனிலுறை யாது
நெகிழாது போதமற நின்றவிழ விருத்த
லரியசுக ரூபமதி லாகா யத்தே
யனிலமடங் குதல்போலுன் போதமற நில்லே. (உ௫)

நின்றபோ தவ்வொளிதோன் றிடுமந்த வொளியி
னீக்கமற நின்றழுந்தல் சுகாதீத மாகு
மென்றுமது பாவித்தல் பாவகம்விட் டிருத்த
லிவையாகா நேரென்று நேர்பெறலு மாகா
வொன்றியுறைத் திடலாகா வுறைப்புவிட லாகா
வுயிருமதன் வழித்தென்னி லிரண்டாகு மதுநா
மென்றிடலஞ் ஞானமா மெல்லாநா மென்று
விகலான்ம வாதமா மிவையொழிந்து பாரே. (உ௬)

நிரவிந்த முறையிருந்தாற் சிவம்பிரகா சிக்கு
மிதுசிவப்பே றுன்மசுத்தி செப்புங் காலை
யாருயிரஞ் ஞானத்தே கூடிடலஞ் ஞானி
யதுதானித் திரையாகு மவ்வுயிர்சத் தோடே

சார்வுறிற்சத் தாகுமது பரையுணர்சாக் கிரமாஞ்
　　சத்துமசத் தும்புணர்ந்தாற் புருடரூ பமதாஞ்
சோர்வறவிந் நிலைக்குள்ளே யுண்டாம்போ தத்தைத்
　　தோற்றுவியுமற்காணப் பட்டவொளி தொடர்ந்தே

அந்தவொளிக் குளடங்கி யதீதப்பட் டிறங்கா
　　தடங்கினீ கண்டசிவத் தின்பசத்தி யெனலாய்
முந்துசுகா தீதமாஞ் சுகாதீ தத்தே
　　முயன்றுபயின் றிடிற்சிவப்பே றுகுமது கண்டால்
வந்திடுங்கா ஞன்மசுத்தி யிதுசிவப்பே றுகு
　　மற்றதுபெற் றோமென்று கருதாதெள் ளளவுஞ்
சிந்தைதனை வற்றெழுது சித்திரமே போலத்
　　திரையற்ற தெள்ளமுதக் கடல்போலுஞ் சிறந்தே.

அன்புருகி யுறையாது நெகிழாது பற்று
　　தணைந்ததனைத் தெரியாதங் கழுந்தின்மகத் தான
வின்பசுக மேபரமா னந்ததரி சனமா
　　மிவைதெளிய வுருகினபொன் போற்சலன மின்றும்
பின்புபர மானந்த யோகநிறை நீரிற்
　　பெருகவிழித் தவர்க்குநிலந் தோன்று மாபோ
லொன்றவுரு கியசெம்பிற் கனற்பொறிதோற் றுவபோ
　　லுனதறிவிற் செருக்குவர வானந்த முதிக்கும்.　(உ௯)

நீடுபர மானந்த போகமுயிர் சிவத்தே
　　நிற்குநெறி யாணவமு மான்மாவும் போலுந்
தாடலைகா றலைப்பதத்தின் புணர்ச்சி போலுஞ்
　　சாற்றிலொன் றுகாதி ரண்டுதானு மாகா
நாடியிரண் டொன்றுகா வதன்வசமா யின்ப
　　நலம்பெறலாம் நாவிரதம் புசிக்குங் காலை
கூடியநா விரதமோ விரதநா வாமோ
　　கொண்டிடாத நாவருந்தல் போலான்ம லாபம்.

அண றலர்ந்த பூவின்மது நிறைய வாரி
யாவலுட னுண்டவண்டு பூவையலை யாம
னின்றதிலே யுறைகின்றோ மென்பதற மயங்கு
நெறிபோலப் போதவிகா ரங்க ளை
சென்றுதெளி வுற்றுன்வச மற்றந்தப் பொருளிற்
சேர்ந்தபோ தினைவிழுங்குந் திரும்பவிடா திதுவே
நின்றபர மானந்த மேவீடா மிந்த
நிலைநின்றோர் சாயுச்சிய நிலையி னரே. (௩௧)

சொல்லியவிந் நிலைகலங்கி லஞ்செழுத்தை விதியாற்
சொரூபசுபா வந்தெரிந்துச் சாரணத்தின் வழியே
புல்லியஞா னச்சுடரைத் தூண்டிநே யத்தாற்
பொருந்தியந்த ஞானப்ர காசத்தின் முதிர்வால்
எல்லொளியாம் பரைநிறைவில் விகற்பறவே சிவமா
மிந்தநிட்டை யந்தநிட்டை யாமிதுவு மகன்றாற்
செல்வமெனக் குருலிங்க சங்கமத்தைப் பொருளாய்ச்
சிந்தையில்வைத் துருகவெல்லாச் சித்தியுமுண் டாமே.

கழக வெளியீடு - ௨௮.

உ

திருச்சிற்றம்பலம்

# சைவசித்தாந்த உண்மைவரலாறு

சென்னை

சட்டகலாசாலைப் பேராசிரியர்

திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை

எம். ஏ., எம். எல்., அட்வகேட்

அவர்கள் எழுதியது

திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி & சென்னை

பிரபவ௵ வைகாசிமீ

[2nd Edition]

Published by

*The South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, Limited, Tinnevelly :: & Madras*

*May, 1927*

[Copy · right]

Printed by

***O. Munisawmy Mudaliar & Sons, Madras***

# பதிப்புரை

சைவ சித்தாந்த உண்மை வரலாறு என்பது செந்தமிழ்ச் செல்வி என்னும் திங்கட்டாளின்கண் திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை யவர்கள் எழுதிய 'சைவசித்தாந்த வரலாறே'யாம்.

இதன்கண் கடவுள், உயிர், உலகம் என்ற முப்பொருள்களின் இயல்பும் தொடர்பும் இனைத்தென்றும், சைவம் (தூய) பண்டைத் தமிழ் மக்கள் நெறியேயாமென்றும், சிவம் என்ற சொல் வடமொழிக் குரியது என்று கூறுவார் மயக்கங் கூறறைந்த தக்க சான்றுகள் கொண்டு மறுத்து அது தமிழ்ச் சொல்லேயாமென்றும், தமிழில் மந்திரங்கள் உளவென்றும் விளக்கப்பெற்றிருக்கின்றன. இது சாத்திர ஆராய்ச்சியாளர்க்கும், சரித்திர ஆராய்ச்சியாளர்க்கும் பெரிதும் பயன்படும். இதனை எழுதித் தமிழுலகிற்குப் பயன்படுத்திய இதன் ஆசிரியருக்கு மிகவும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்தார்.

திருச்சிற்றம்பலம்

# சைவசித்தாந்த உண்மைவரலாறு

## (சிவநெறி வரலாறு)

**சைவம் சித்தாந்தம்** என்ற இருசொற்களின் பொருளை முதற்கண் ஆராய்ந்து கொண்டு பின் அவ் விரண்டுஞ் சேர்ந்து மாகிய தொடர்மொழிப் பொருளின் வரலாற்றை ஆராய்வாம். **சைவம்** என்றது **சிவம்** என்னுஞ் செந்தமிழ்ச் சொல்லடியாய்ப் பிறந்து சிவனோடு தொடர்புடைமை என்னும் பொருளில் வழங்குவது. சிவனைப் பற்றிய நிலையையும் சைவ நூல்களையும் சிவனடி சேர்தற்குரிய நெறியையும் அச்சொல் குறிக்கும். **சித்தாந்தம்** என்பது **சித்த அந்தம்** என்ற இரு சொற்களால் ஆகி முடிபின் முடிபு என்று பொருள் பெறும். சைவ நூல்களின் முடிந்த முடிபைக் கூறும் நூல்களைச் **சைவ சித்தாந்த** மென்ப. அச்சைவ சித்தாந்த நூல்கள் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை எளிதில் எய்துதற்குரிய நெறி ஈதெனக் காட்டுவன. அந்நெறியே கடவுளை நாடிச் செல்லும நெறிகள் பலவற்றுள்ளும் தலை சிறந்ததாகலின் **சேக்கிழார் சுவாமிகள்** அதனை 'முதற் சைவ நெறி' யென்றார். அந்நெறியே முதல்வனோடு கலத்தலாகிய திருவை அளிக்க வல்லதாக

னின் திருமூலமாமுனிவர் அதனைத் 'நன்னெறி' யென்றார். 'திருநெறிய தமிழ்' என்றதும் அது. திரு வென்பதும் சிவம் என்பதும் ஒத்த பொருளுடையன. உண்மைத் திரு வுடையோன் சிவனென அறிவார் இனிதுணர்வாராகலின் திருநெறி யென்றவிடத்து முடிபுணர்ந்த சொல் வேண் டியதின்றாயிற்று. இதனை அறியாத பல்வேறு மதக்கட் டுறுங்கள் வேழங் கண்டோர் சென்ற விழியிலார் ஒப்பத் தத்தம் புலனறிவுக்குத் தோன்றியவாறு திருவிலா நெறி பலவற்றைத் திருவுடையவாகக் கருதி மயங்குவர். அன் னோர்க்கு முடிபாயவழி இஃதே யென வுணர்த்த நின்றது சித்தாந்த மென்னும் சொற்றொடர்.

மலைத்தலைமீதுள்ள மாண்பெரு நாட்டிற்குச் செல் லும் வழியானது மலைக்கு அருகிலுள்ள நிலத்திலும் படிப் படியாகக் கடந்து செல்லும் குன்றுகளிலும் உள்ள தங் கிடங்கட்கும் வழியாக அமைந்தபோல, முழுமுதற் கட வுளை நாடிச் செல்லும் நெறியின் பகுதிகளாகப் பிற நெறிகள் அமையும். ஆதலால் உயிரில்லாத பூதங்களையும் உயிரையும் உயிர் வகைப்பட்ட சிறு தெய்வங்களையும் முடி ந்த பொருள்களெனக் கொள்வாரது சிறு நெறிகளைப் பகுதியாகப் பெற்று அவற்றைக் கடந்து முதல்வனிடம் நேரே செல்வது நமது திருநெறியாதலின் அதனைப் பெரு நெறி யென்றார் பெரியர். முகில்களைக் கடந்து ஓங்கிச் செல்லும் உயர் நெறியானது பகல் முழுவதும் இடை யீடின்றிக் கதிரவன் ஒளி பெற்றுத் திகழ்வதொப்பப் புறச்சமய வெல்லை கடந்து செல்லும் சிவநெறி திருவரு ளொளி பெற்று மிளிர்வதால் அதனை 'ஒளிநெறி' யென்

